REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ 'PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 2] சென்னை: சித்திரை 21௨ புதன் (4—5—55) ★ ★ வெளியூர்: சித்திரை 22௨ வியாழன் (5—5—55) [இதழ் 276

## முத்தத்தின் விலை 6 மாத சிறை!

மிருஷ்ணகர், மே 3—

'குடை ராட்டினம்' ஒன்றில் உல்லாசமாக சுற்றிக்கொண்டிருந்த இளம் தம்பதிகள், ஒருவரையொருவர் மகிழ்ச்சிப் பெருக்கால் முத்தமிட்டுக்கொண்டனராம்.

இதைக் கண்டு போலீசார், 'அவர்கள் பொது இடத்தில் முத்தமிட்டது தவறு,' எனக் கூறி, வழக்குத் தொடர்ந்தனர். பேரில் வழக்கை விசாரித்த நீதிபதி அவர்களுக்கு ஆறு மாத சிறைத் தண்டனை அளித்துள்ளார்.

தீர்ப்பை எதிர்த்து செய்துகொண்ட அப்பீலும் தள்ளுபடி செய்யப்பட்டுவிட்டதாம்!

# 'இந்தியாவுக்கு ஒரு பொது மொழி இருக்க முடியாது'

## 'கட்டாயம் என்றால் எதிர்ப்பு கிளம்பும்'

## இந்தி வெறியர்களுக்கு வி.கே. கிருஷ்ண மேனன் எச்சரிக்கை

சென்னை, மே 4—

"இந்தியா போன்ற நாட்டுக்கு ஒரு பொது மொழியை வைத்துக்கொள்வது என்பது இயலாததாகும்; சென்ற மூன்று ஆண்டுகளிலே ஒரு உண்மை புலப்பட்டிருக்கிறது; 'இந்தியாவின் ஒரு தேசிய மொழி,' என்று நாம் பேசக்கூடாது; 'இந்தியாவின் தேசிய மொழிகள்' என்றுதான் நாம் பேச வேண்டுமென்பதே அந்த உண்மை,"

—என்று, வி. கே. கிருஷ்ணமேனன், 'உட்லண்ட்ஸ்' விடுதியில் நடைபெற்ற வழக்கறிஞர் கழகத்தில் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

"ஒரு நாட்டின் பொது மொழி என்பதற்கும், நாட்டின் ஒற்றுமை என்பதற்கும் இடையே உள்ள தொடர்பு என்னவென்பதைப் பற்றி தவறான கருத்துக்கள் இருக்கின்றன,"

என்று, கிருஷ்ணமேனன் மேலும் குறிப்பிட்டார்.

அவர் தொடர்ந்து கூறியதாவது:—

"பொது மொழி என்பதற்கு இனவாரியாக மூலாதாரம் இருக்கிறதென்று முடிவு செய்வது கூடாது; அதுபோலவே பொது மொழி ஒன்று இருப்பதால், 'ஒற்றுமை இருக்கிறது,' என்று கருதுவது கூடாது; ஆனால், அதற்காக பொது மொழி ஒன்றை அமைக்க முயற்சிக்காமல் இருக்க வேண்டுமென்பதில்லை; மனிதர்களிடையே உணர்ச்சிகளைப் பரிமாற வசதி அளிப்பதால், பொது மொழியின் மூலம் மக்களைச் சந்திக்க வாய்ப்பு ஏற்படலாம்; என்றாவது ஒருநாள், இந்தியாவின் மொழிகள் அனைத்தையும் ஒரே லிபியில் எழுதும் நிலை ஏற்பட்டால் நல்லது.

"ஆனால், இந்தியாவின் மொழிகளை ரோமானிய லிபியில் எழுத மக்கள் கருத்து ஆதரவாக இருக்குமா என்று நான் நினைக்கவில்லை. காரணம், இந்திய மொழிகள் அனைத்தும் ஒலியை அடிப்படையாகக் கொண்டுள்ளவை.

"இந்தோனேஷியா, இந்தோசைனா, தாய்லாந்து போன்ற நாடுகளில் மொழிகள் அனைத்தும் ஒரே 'லிபி'யில் எழுதப்படுகின்றன என்பது உண்மைதான்; ஆனால் அந்த மொழிகளுக்குப் பின்னால் பெரியதோர் சரித்திரமே இருக்கிறது; அந்தச் சரித்திரம், இந்திய மொழிகளுக்குப் பின்னால் கிடையாது.

"நமது நாடு போன்ற ஒரு நாட்டிற்கு ஒரு பொது மொழி இருப்பதென்பது இயலாத ஒன்றாகும். தென் அமெரிக்காவில்கூட, வட பகுதியில் பேசப்படும் மொழிக்கும், தென் பகுதியில் பேசப்படும் மொழிக்கும் மாறுபாடுகள் உள்ளன. சட்டத்தின் மூலம் ஒரு பொது மொழியை உருவாக்க முடியாது. அடுத்து வருகிற இருபத்தைந்து ஆண்டுகளில், தெற்கே இருப்பவர்கள் வடக்கே இருப்பவர்களைக் காட்டிலும், இந்தி மொழியை இலக்கியப் பண்புகளுடன் பேசலாம்; ஆங்கில மொழியை ஆங்கிலேயர்களைக் காட்டிலும் திறமையாகப் பேசியது போல் பேசுவார்கள். ஆனால் அந்த நிலைமை ஒரு பொது மொழியை உருவாக்கிவிடாது.

"அதனால்தான், கடந்த மூன்றாண்டு காலமாக, 'இந்தியாவின் தேசிய மொழி' என்று பேசுவதைவிட, 'இந்தியாவின் பொது மொழிகள்,' என்று பேசுவதில்தான் அதிக உண்மை இருக்கிறது என்று உணரப்பட்டிருக்கிறது. 'பொது மொழிகள்' என்பன இந்தியாவில் பெரும்பான்மை மக்களால் பேசப்படும் மொழிகள்

(4-ம் பக்கம் பார்க்க)

## மத குருமார் ஆதிக்கத்திற்கு ஆட்டம்

### சர்க்காருக்கும் தேவாலயங்களுக்கும் தகராறு

*அர்ஜெண்டைனா குடியரசுத் தலைவர் விளக்கம்*

"மத குருமார்கள் ஆண்டவன் முன் மண்டியிட்டு வேண்டுகிறார்கள்; ஆனால் நாம், குடியரசுத் தலைவர் பெரானின் கண்ணியமான போக்கினையே விரும்புகிறோம்.

"பூசை பீடத்தை நோக்கி தங்கள் முகத்தையும், மக்களை நோக்கி தங்கள் முதுகுப் புறத்தையும் வைத்துக்கொண்டு அரைகுறை 'லத்தீன் மொழி' பேசுபவர்களைக் காட்டிலும், நமது தாய்மொழி பேசுபவர்களையே நாம் அதிகம் விரும்புகிறோம்,"

—என்று, அர்ஜெண்டைனா மக்கள் சபையில் தொழிலாளர் மாநாட்டுப் பொதுச் செயலாளரான செனார்வலேடிச் என்பார் பேசியிருக்கிறார்.

"மத குருமார்கள் அவசியமாக வேண்டும் என்று மக்கள் விரும்பினால், அவர்களை நம்முடன் வைத்துக்கொள்வோம்; ஆனால், மக்கள், மத குருமார்களைப் பிரித்துவிட வேண்டும் என்று விரும்பினால், அவர்களை நம்மிலிருந்து பிரித்து ஒதுக்கிவிடுவோம்."

"நாம் இப்போதுதான் ஒரு சிலர் மக்களை ஆட்சிபுரியும்—ஆட்டிப்படைக்கும் நிலையை ஒழிக்கும் தருணத்தை அடைந்திருக்கிறோம்."

—இவ்வாறு, அர்ஜெண்டைனாவின் குடியரசுத் தலைவர் ஜுவன் பெரான் என்பவர் நாட்டு மக்களுக்கு விடுத்துள்ள சொற்பொழிவில் குறிப்பிட்டிருக்கிறார்.

தேவாலயங்களுக்கும் — சர்க்காருக்கும் இருந்துவரும் தகராறு பற்றி அவர் நேரிடையாக எதுவும் தனது சொற்பொழிவில் குறிப்பிடாதது பலருக்கு ஏமாற்றமாயிருந்ததாம்.

தனது குடியரசுத் தலைவர் மாளிகையின் பரந்த இடத்தை, மாணவர்கள் தங்கிக்கொள்ள பெரான் தந்திருக்கிறார். அவரது இந்த அருஞ்செயல் தேவாலயத்திலிருக்கும் மத குருமார்களுக்குப் பிடிக்கவில்லை. குடியரசுத் தலைவரின் இந்த எடுத்துக்காட்டிற்குரிய செயலை அவர்கள் வன்மையாகக் கண்டித்திருக்கின்றனர்.

இதுபற்றிக் குறிப்பிட்ட குடியரசுத் தலைவர், தாம் நல்ல நம்பிக்கையுடனும், நல்லெண்ணத்துடனுமே தனது மாளிகையை மாணவர்களுக்குத் தந்ததாகக் கூறியிருக்கிறார்.

மேலும் இதுபற்றி குடியரசுத் தலைவர் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"நாம் எவருடைய உரிமைகளுக்கும் எதிராக இருக்கவில்லை; ஆனால், நமது கலாச்சார நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தவோ, மக்களைச் சுரண்டவோ எவருடைய உரிமைகளேனும் பயன்படுத்தப்படுவதையும் நாம் விரும்பவில்லை.

"அர்ஜெண்டைனாவில் சமூக, பொருளாதார, அரசியல் புரட்சிகள் நடந்து முடிந்தாயிற்று; இப்போது, அர்ஜெண்டைனா ஒரு ஒழுங்கு முறையான நெறிக்காக புரட்சி செய்தாக வேண்டும்."

இவ்வாறு மக்கள் சபையின் 89-வது கூட்டத்தொடக்கத்தில் பேசுகையில் அவர் குறிப்பிட்டார்.

மக்கள் சபைக் கூட்டத்தில் முதன் முறையாக இப்போதுதான், தேவாலயங்களைச் சார்ந்த பாதிரிமார்கள் கலந்துகொள்ளாது புறக்கணித்தனராம்!

## ஆவடி காங்கிரசுக்கு அரசாங்கம் செலவழித்த பணம் எவ்வளவு?

### கணக்கெடுக்கும் அவசியம் பற்றி பண்டிதர் வற்புறுத்தல்

புதுடில்லி, மே 2—

பண்டித நேருவின் உத்திரவுப்படி, அரசாங்க சார்பில், 'ஆவடி காங்கிரசுக்கு இந்திய சர்க்கார் செலவிட்ட பணம் எவ்வளவு,' என்று மீண்டும் ஒரு முறை பரிசீலனை செய்யப் போகிறார்களாம்.

'ஆவடி காங்கிரஸ் மாநாட்டிற்கு ஆன செலவுகள் எதையும் சர்க்கார் கணக்கில் எழுதக்கூடாது,' என்று பண்டித நேரு விரும்புகிறார் என்றும், இதன் விளைவாகத்தான் இந்திய சர்க்கார் இந்தக் கணக்கெடுக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறது என்றும் கூறப்படுகிறது.

காங்கிரஸ் கட்சியின் பெரும் தலைவர்களே மத்திய சர்க்கார் அல்லது மாநில சர்க்கார் ஆகியவற்றில் பதவி வகிப்பதால், இந்தப் பிரச்சினையில் மிகவும் 'எச்சரிக்கை'யாக இருக்க வேண்டுமென்று பண்டித நேரு வற்புறுத்தியிருக்கிறார்.

'சர்க்கார் இயந்திரமும், காங்கிரஸ் கட்சியின் இயந்திரமும் ஒன்று,' என்ற முறையில் சேர்க்கப்பட்டுவிடக்கூடாது என்றும், அவைகளைத் தனியே பிரித்து வைக்க வேண்டும் என்றும் அவர் கூறியதாகத் தெரிகிறது. கட்சியின் தலைவர்கள் அரசாங்கத்தின் தலைவர்களாக இருப்பதால் இவை இரண்டையும் ஒன்றாக்குவது கூடாது என நேரு கருதுகிறாராம்.

இப்படி ஆவடி காங்கிரஸ் மாநாட்டின் செலவுத் தொகையைப் பரிசீலிக்கும் பிரச்சினை கிளம்பியதற்குக் காரணம், நடைபெற்ற செலவுகளில் கோளாறு இருக்கிறது என்று கண்டுபிடிக்கப்பட்டதால் இல்லை என்று சுட்டிக் காட்டப்படுகிறது.

நடைபெற்ற செலவுகளுக்குக் காங்கிரசும், சர்க்காரும் எவ்வளவு தூரம் பொறுப்பாளிகள் என்று காணவேண்டுமென்ற நினைப்பு சில காலமாகவே இருந்து வருகிறதாம்.

ஆகவே, 'ஆவடி மாநாட்டிற்காக, இந்திய சர்க்கார் செலவு செய்தது எவ்வளவு?' என்ற பரிசீலனை நடைபெறும் என்று தெரிகிறது.

இச்செய்தியை சென்னை 'மெயில்' இதழ் வெளியிட்டிருக்கிறது.

இந்தச் செலவுப் பிரச்சினையை எப்படிச் சமாளிப்பது என்பதற்கு பண்டிதநேரு ஒரு சில விதி முறைகளையும் குறிப்பிட்டிருக்கிறாராம்.

"காங்கிரஸ் மாநாட்டிற்கென்று செலவிடப்பட்ட ஒவ்வொரு செலவையும் காங்கிரஸ் கட்சிதான் ஏற்றுக்கொள்ள வேண்டும்,' என்று பண்டித நேரு கூறியிருக்கிறாராம்.

மின்சார விஸ்தரிப்பு, சாலை அபிவிருத்திகள், சுகாதார ஏற்பாடுகள் இவை அனைத்தையும் காங்கிரஸ் கட்சி ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றும், சர்க்காரில் பதவி வகிப்போரின் பாதுகாப்பிற்கென நடைபெற்ற செலவுகளை மட்டும் சர்க்கார் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும் பண்டிதர் விரும்புகிறாராம்!

## இங்கிலாந்து துணி இறக்குமதி வரி குறைக்கப்படுகிறது

இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்யப்படும் பருத்தி ஜவுளிகள் மீது இறக்குமதி வரியைக் குறைக்க இந்தியப் பேரரசு முடிவு செய்திருப்பதாக மக்கள் சபையில் நிதி மந்திரி சி. டி. தேஷ்முக் அறிவித்திருக்கிறார்.

"இதனால் உள்நாட்டு துணி ஆலைத் தொழில் பாதிக்கப்படமாட்டாது," என்றும் அவர் தெரிவித்திருக்கிறார்.

இதுகாறும், பிரிட்டிஷ் பருத்தி ஜவுளிமீது 60 முதல் 80 சதம் வரை இறக்குமதி வரி விதிக்கப்பட்டு வந்தது; இனிமேல் 25 சதம் மட்டுமே வரி விதிப்பு இருக்கும்.

ஆனால், இந்திய ஜவுளிமீது விதிக்கப்படும் உள்நாட்டு வரியும், 'செஸ்' வரியும் வசூலிக்கப்படும்; அதாவது, 25 சத இறக்குமதி வரியுடன், மிக மெல்லிய ரக துணி மீது கஜம் ஒன்றுக்கு 2 அணா உள்நாட்டு வரியும் கைத்தறி 'செஸ்' வரியாகக் காலணாவும் வசூலிக்கப்படும் என்று தெரிகிறது.

மாநில சர்க்கார்கள், தங்களுடைய குடியிருப்பு வசதித் திட்டங்களுக்காக 1951—54-ல் 5 10 கோடி ரூபாய் செலவு செய்தார்கள்.

நம் நாடு
தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

சென்னை 4—5—'55 புதன்

# ஏன் இந்தப் போக்கு?

போபால் பகுதியில் உள்ள காடு கரம்பைப் பண்படுத்தி நல்ல பயிர் நிலங்களாக மாற்றி அமைப்பதற்கு திரு-கொச்சியிலிருந்து திராவிட இன மக்கள் குடியேற்றப்பட்டு வருகிறார்கள். இந்தக் குடியேற்ற ஏற்பாட்டிற்கு ஒப்புக்கொள்வதைத் தவிர்த்து, உள்நாட்டுப் பகுதியிலேயே வாழ்வதற்கு வகை கிடைக்காத காரணத்தால், திரு-கொச்சி மக்களும் மேற்படி குடியேற்றத்திற்கு இணங்கித் தீரவேண்டிய கட்டாயத்தில் இருக்கின்றனர்.

உள் நாட்டிலேயே வாழ்க்கையை நடத்துவதற்கு வேறு வசதிகள் இருக்குமானால், அவர்கள் திரு-கொச்சியை விட்டு ஒருக்காலும் வெளியேற முன்வரப்போவது கிடையாது. அவர்கள் பிறந்த இடத்திலேயே வாழ கூடுமான வரை வசதி செய்து கொடுப்பதுதான் நியாயமும் முறையுமாகும். ஆனால் அந்த நியாயமான போக்கை மேற்கொள்ள கடமைப்பட்டிருக்கும் இந்தியப் பேரரசோ, அவர்களை வெளி இடங்களுக்கு ஓட்டிச் சென்று, கடின உழைப்புக்கு ஆளாக்குவதில் முனைந்திருக்கிறது.

வட இந்திய போபால் பகுதி மலையாள மொழி பேசும் திராவிட மக்களுக்கு, முன்பின் பழக்கமற்றப் புதிய இடமேயாகும்.

போபாலுக்கும் திரு-கொச்சிக்கும் தட்ப வெட்ப நிலையில் கணிசமான மாறுபாடு இருக்கத்தான் இருக்கிறது. மொழி முதல், மற்றப் பழக்க வழக்கங்கள் அனைத்திலும் முரண்பாடும் வேறுபாடும் இருக்கத்தான் இருக்கின்றன. எனவே, போபாலில் குடியேறியுள்ள திராவிட மக்களிடம், அங்குள்ள மக்களுக்கு உயர்ந்த நட்புறவு ஏற்படுவது விரைவில் எதிர்பார்க்கக் கூடியதன்று. அதற்குப் பதிலாக, அங்கு பஞ்சம் பிழைக்கப் புகுந்துள்ள திராவிடக் குடும்பங்களை, போபால் மக்கள் அருவருப்பாகப் பார்ப்பதும், அலட்சியமாகக் கருதி நடத்துவதும், நடைமுறையில் எதிர்பார்க்கக் கூடியதேயாகும்.

தங்களிடத்தில் போபால் மக்கள் காட்டும் போக்கைக் கண்டு, அங்கு குடியேற்றப்பட்டுள்ள திராவிட மக்களும், போபால் மக்களை ஒரு மாதிரியாக நோக்கவும், நடந்துகொள்ளவும் முற்படுவர் என்பதில் ஐயமில்லை. இதன் விளைவாக, போபாலில் புதியதோர் சிக்கல் கிளம்பக்கூடும் என யூகிப்பதற்கும் இடமுண்டு.

போபால் பகுதியில் உள்ள மக்களுக்கும், அங்கு குடியேறியுள்ள திராவிட மக்களுக்கும் ஏற்படும் மனக் கசப்பானது அவர்களிடத்தில் நிகழ்வதோடு மட்டும் கட்டுப்பட்டுவிடப் போவதுமில்லை. திரு-கொச்சி மக்கள் என்றால் போபால் மக்களுக்கு ஒருவகை எரிச்சல் ஏற்படுவதும், அதேபோன்று போபால் மக்கள் பெயர் கேட்டதும் திரு-கொச்சி மக்களுக்கு ஆத்திரம் மூளுவதும் நிகழக்கூடும்.

இத்தகு விரும்பத்தகாத எரிச்சலும் ஆத்திரமும் இருவகை மக்களிடத்திலும் ஏற்பட இருப்பது, அவரவர்கள் விருப்பு வெறுப்பினால் ஏற்படக்கூடிய ஒன்று அல்ல. தாங்கள் மோதிக்கொள்வதற்கான சூழ்நிலையை தங்களுக்கு உண்டாக்கி வைத்தது இந்தியப் பேரரசின் அவசரப் போக்கே என்பதை இருசாராரும் ஆரம்பத்தில் உணரப் போவது கிடையாது. இந்த உண்மையை காலப் போக்கில்தான் அவர்களால் அறிந்துகொள்ள முடியும்.

தமிழர்-ஆந்திரர் மனக்கசப்பும், மலையாளி—தமிழர் பிணக்கும், இந்தியப் பேரரசு மேற்கொள்ளும் செயல் முறையின் உருபலனேயாகும். அதே பயங்கரமான பலன்தான் மேற்படி குடியேற்றத்தாலும் ஏற்பட இருக்கிறது. நிற்க,

உடலுழைப்பின் மேன்மையையும் அவசியத்தையும் குறித்து நாள் தவறாது பேசி வரும் இந்தியப் பேரரசு, உடலுழைப்பை பழித்துப் பேசி வந்த கூட்டத்தை, உடலுழைப்பை மேற்கொள்ளத் தூண்டுவதுதான் முறையாகும். ஆனால், உடலுழைப்பை ஒதுக்கித் தள்ளிவந்தவர்களை, சுகஜீவிகளாக வாழவைக்க இந்தியப் பேரரசு அவர்களுக்குப் பல வகையிலும் உதவி செய்து வருவது வியப்பாகத்தான் இருக்கிறது.

போபால் காட்டைத் திருத்தி அமைக்க, தென்கோடி மூலையில் இருந்து வேறு கலாசாரப் பரம்பரையில் வந்த மக்களைக் கடத்திச் செல்லும் இந்தியப் பேரரசு, அதே நேரத்தில் அகதிகள் என்ற போர்வையில் தனது தத்துப் புத்திரர்களாக உள்ள சிந்திவாலாக்களை திராவிடத்திற்கு இறக்குமதி செய்த வண்ணம் இருந்து வருகிறது. இங்கு திணிக்கப்படும் சிந்தி அகதிகள், தங்களைப் பஞ்சம் பிழைக்க வந்தவர்களாக அறவே கருதுவது கிடையாது. அதற்கு மாறாக, வட இந்திய அரச பரம்பரையினராகவே தங்களைத் தீர்மானித்துக் கொண்டு, இங்குள்ளவர்களையும் இழிவாகக் கருதி நடத்தும் துணிவு பெற்றுள்ளனர்.

இங்கு வந்துள்ள அகதிகளிடம் காணப்பெறும் இப்போக்கிற்கு, அவர்களுக்கு இந்தியப் பேரரசு செய்துதரும் சலுகைகளே மூலகாரணமாகும். அகதிகள்பால் இந்தியப் பேரரசு காட்டிவரும் ஆதரவும் பரிவும், அவர்கள் தலைகளை கனக்கச் செய்துவிடுகிறது.

இங்குள்ள காடுகளைத் திருத்தும் பணிக்கோ, பாதை அமைக்கும் தொழிலுக்கோ, மண்சுமக்கும் வேலைக்கோ, இந்தியப் பேரரசு சிந்தி அகதிகளை ஈடுபடுத்துவது கிடையவே கிடையாது. ஆனால் அதற்கு மாறாக, நகத்தில் மண் படாத வியாபாரம், தொழில் போன்றவற்றை மேற்கொள்ளுவதற்கான வாய்ப்புகளையும் வசதிகளையும் இந்தியப் பேரரசு அவர்களுக்கு உண்டாக்கிக் கொடுத்தவண்ணம் உள்ளது.

தொழிலுக்கு ஆயிரக் கணக்கில் மூலதனம், மானியம், இனமாகக் கல்லூரிப் படிப்புத் தொழில் படிப்பும் பெறுவதற்கான வசதி, உயர்ந்த மருத்துவ வசதி, ஆகிய வசதிகள் அனைத்தும் இந்தியப் பேரரசு இங்குள்ள அகதிகளுக்குத் துளியும் தாமதம் காட்டாமல் செய்து தருகிறது.

திராவிடத்தில் புகுந்துள்ள சிந்தி அகதிகளை கூண்டுக் கிளிகளாகக் காத்துவரும் இந்தியப் பேரரசுதான் அதே மூச்சில், திரு—கொச்சி திராவிட இன மக்களை போபால் காடுகளில் உழைக்கக் கூட்டிச் செல்கிறது.

போபால் காடுகளைத் திருத்த திரு-கொச்சியிலிருந்து திராவிட குடும்பங்களைக் கூட்டிச்செல்வதற்குப் பதிலாக, இங்குள்ள சிந்தி அகதிகளைக் கூட்டிச் செல்வதுதான் எல்லா வகையிலும் பொருத்தமுடையதாகும். உடலுழைப்பின்சிறப்பை இந்தியப் பேரரசு உபதேசம் செய்து வருவதிலும் உண்மை இருக்கத்தான் இருக்கிறது என, அப்பொழுதுதான் பிறர் நம்பவும் செய்வர்.

ஒரே நேரத்தில் உடலுழைப்புக்கு இடமே இல்லாத சுக வாழ்வை அகதிகளுக்கும், உடலுழைப்பைப் பெருக்கி பாழ்பட்ட வாழ்வை திராவிட இன மக்களுக்கும் தந்துவரும் இந்தியப் பேரரசின் போக்கு, நியாயமானதுதானா — முறையானதுதானா — ஒப்புக்கொள்ளக்கூடியதுதானா என்பதை, 'ஏக இந்தியா'க்காரர்கள் சிந்தித்துத் தீர்ப்பளிக்க வேண்டும். இந்தியப் பேரரசின் மேற்குறிப்பிட்டுள்ள இரு செயலிலும் மறைந்து கிடக்கும் உண்மையையாவது, அவர்கள் விளங்கிக்கொள்ள வேண்டும். 'ஏன் இந்தப் போக்கு?' எனக்கேட்க திரு-கொச்சி அரசாங்கம் முன்வரவும் வேண்டும்.

## மகா பஞ்சாப் மாநிலக் கோரிக்கை

புதுடில்லி, மே 2—

"மகா பஞ்சாப் மாநிலக் கோரிக்கையை எழுப்புவோர், பலாத்காரச் செயல்களால் பிறரை அச்சுறுத்தி, தங்கள் கோரிக்கையை ஈடேற்றிக் கொள்ள முடியாது; யாரேனும் சிலர் பலாத்காரத்தால் காரியங்களைச் சாதித்துவிடலாம் என்றெண்ணினால், அவர்கள் எண்ணம் தவறானதாகும்; அமைதியையும், சட்டத்தையும் அவமதிக்கும் வகையில் யாரேனும் நடந்துகொள்வதை அரசாங்கம் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது,"

என்று மத்திய அரசாங்க உள்நாட்டு மந்திரி பண்டித வல்லப பந்த் பொதுக் கூட்டமொன்றில் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

## சந்திப்பார்கள்!

"சீனப் பிரதம மந்திரி சூ-என்-லாயும், வியட்மின் குடியரசுத் தலைவர் டாக்டர் ஹோசி-மின்னும், யுன்னான் மாநிலத் தலைநகரான குன்மிங் எனுமிடத்தில் சந்திக்கலாம்," என்று சில ஹாங்காங் விமர்சகர்கள் கருதுகின்றனராம்.

---

இந்தியாவில் கிராமக் கடன் பொறுப்புகள் சுமார் ரூ. 750 கோடி இருக்கும் என்று கிராமக் கடன் வசதி சர்வே நிறுவனம் மதிப்பிட்டிருக்கிறது.

# ஆங்கிலத்திற்குப் பதில் இந்திதானும்!

## அரசியல் சட்டம் சுட்டிக்காட்டப்படுகிறது!

### இந்தித் திணிப்பு பற்றி பண்டித பந்த்

"அகில இந்திய சர்க்கார் உத்தியோகங்களுக்கான பரீட்சைகளுக்கு ஆங்கிலத்திற்குப் பதிலாக இந்திதான் படிப்படியாக வரும்; அண்மையில் நியமிக்கப் படவிருக்கும் இந்திக் குழுவினைக் கலந்துகொண்டு, இது பற்றி ஒரு திட்டமான முடிவு மேற்கொள்ளப்படும்,"

என்று உள்நாட்டு மந்திரி பண்டித பந்த் மக்கள் சபையில் குறிப்பிட்டிருக்கிறார்.

பரீட்சையில் கேள்விகளுக்கு இந்தியில் பதிலளிக்க வேண்டும் என்று யூனியன் 'பப்ளிக் சர்வீஸ் கமிஷன்' கோருவதை சர்க்கார் கவனத்திற்கு தோழர் எஸ். வி. இராமசாமி கொண்டுவந்தபோது, பண்டித பந்த் இவ்வாறு கூறியிருக்கிறார்.

அவர் மேலும் சொன்னார்:—

"அகில இந்திய உத்தியோகப் பரீட்சைகள் இந்தி, ஆங்கிலம் மற்றும் முக்கியமான பிரதேச மொழிகளில் நடத்தப்பட வேண்டும் என்றும், கேள்வித்தாளுக்குப் பதிலெழுத மாணவர்கள் தம்மிஷ்டப்படி மேற்கண்ட மொழிகளில் எந்த மொழியில் வேண்டுமானாலும் பதிலளிக்கலாமெனவும் காங்கிரஸ் செயற்குழு சிபாரிசு செய்திருக்கிறது.

"இந்தி அல்லது பிரதேச மொழியில் தேறுபவர்கள் ஆங்கிலத்திலும், ஒரு பரீட்சை எழுத வேண்டும்—அகில இந்திய பரீட்சையில் வெற்றி பெற்ற எல்லா மாணவர்களும் இந்தியில் ஒரு பரீட்சை எழுதவேண்டும்—என்பதே செயற்குழுவின் கருத்து.

"இந்திதான் இந்தியாவின் தேசிய மொழி என அரசியல் சட்டம் கூறுகிறது; இன்னும் பதினைந்து ஆண்டுகளில், சர்க்கார் அலுவல்கள் இந்தியிலேயே நடத்தப்படவேண்டும் என்றும் விதிக்கப்பட்டிருக்கிறது; எனவே அகில இந்தியப் பரீட்சைகளுக்கு ஆங்கிலத்திற்குப் பதிலாக இந்தி மொழியை படிப்படியாகப் புகுத்துவதற்கு நடவடிக்கைகள் மேற்கொள்வது அவசியமே," என்றார்.

## இந்தியக் குடி உரிமை மசோதா

இந்தியக் குடிஉரிமை மசோதாவை உள்நாட்டமைச்சர் பந்த் மக்கள் சபையில் பிரரேபித்தார்.

இந்திய அரசியல் சட்டம் குடிஉரிமை பற்றிக் குறிப்பிடும் விதிமுறைகளை அதிகரிக்கும் முறையில் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது.

இச்சட்டப்படி இந்தியாவுக்கு வெளியிலிருக்கும் கப்பல்கள், விமானங்கள் ஆகியவற்றில் பிறக்கும் குழந்தைகள், அக்கப்பல்கள், அல்லது விமானங்கள் பதிவு செய்யப்பட்ட நாடுகளின் குடிஉரிமையைப் பெறுவதாகும்.

1950-ம் ஆண்டு ஜனவரி 26-ந் தேதியிலேயோ அல்லது அதன் பின்னரோ இந்தியாவில் பிறக்கும் குழந்தைகள் இந்தியக் குடிஉரிமையைப் பெறும்.

அந்தத் தேதிக்குப் பின்னர் இந்தியாவுக்கு வெளியே பிறக்கும் குழந்தைகள், அவர்களின் தந்தையர் இந்தியர்கள் என்றால் அவைகளுக்கு இந்தியக் குடிஉரிமை கிடைக்கும்.

அடுத்து, யாராவது இந்தியக் குடிஉரிமையை பெற விரும்பினால் குறிப்பிட்ட காலம் இந்தியாவில் தங்கியிருப்பதன் மூலமாகவோ அல்லது பதிவு முறையினாலோ பெற்றுக்கொள்ளலாம்.

தவறான முறையில் பதிவுச் சீட்டுகளை யாரேனும் பெற்று இந்தியர்களாயிருந்தால், மத்திய சர்க்கார், அந்த நபரின் குடிஉரிமையை ரத்து செய்வதற்கும் இந்த மசோதா அதிகாரம் அளிக்கிறது.

## கிராம மக்களுக்கு கண் வைத்திய வசதி

சென்னை, மே 2—

மாநிலம் முழுவதிலும், கிராமாந்திரங்களில் வசிப்பவர்களுக்குக் கண் வைத்தியம் செய்வதற்காக இரண்டு மோட்டார் கண் வைத்தியசாலைகளை ஏற்படுத்தும் திட்டம் குறித்து சர்க்கார் ஆலோசித்து வருகின்றனர்.

இந்த மருத்துவ நிலையங்களை ஏற்படுத்த சுமார் ரூ. 70,000 செலவாகுமென்று எதிர்பார்க்கப்படுகிறதாம்.

செங்கற்பட்டிலும், இராமநாதபுரத்திலும் உள்ள மாவட்ட தலைமை மருத்துவ நிலையங்களில் கண் வைத்தியப் பிரிவு ஏற்படுத்துவது பற்றியும் சர்க்கார் ஆலோசித்து வருகின்றனராம். இவற்றிற்கு ஆண்டிற்கு ரூ. 50,000 செலவாகுமாம்.

## இந்து திருமண மசோதா

### பத்தாம் பசலித் தத்துவங்கள் இந்தக்காலத்திற்கு ஏற்றவையல்ல

### சட்ட மந்திரி பதில்

இந்து திருமண மசோதாவின் முதல் 'வாசிப்பு' மக்கள் சபையில் நிறைவேறியுள்ளது.

சட்ட மந்திரி படாஸ்கர் மசோதா மீது நடைபெற்ற விவாதத்திற்கு பதிலளிக்கையில், இந்துக்களில் 80 சதவிகிதம் பேரிடையே ஏற்கனவே மணவிலக்கு இருந்துவருகிறது என்றும், இம்மசோதா இந்து சட்டத்தை ஒரே மாதிரியானதாகச் செய்யும் முயற்சிதான் என்றும் கூறியிருக்கிறார்.

"இந்தியாவில் உள்ள எல்லா வகுப்பினருக்கும் ஒரே மாதிரியான சட்டத் தொகுப்பு வேண்டும்" என்ற கோரிக்கைக்கு சட்ட மந்திரி பதிலளிக்கையில், "நாட்டில் உள்ள மிகப் பெரிய வகுப்பினருக்கு ஒரே வகையான சட்டத் தொகுப்பு வகுப்பதில் நாம் வெற்றி பெற்றுவிட்டால் நாட்டில் மீதமுள்ள 20 சதவிகித மக்களுக்கு படிப்படியாக சட்டத் தொகுப்பை விரிவுபடுத்திக்கொள்ள முடியும்," என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

"சட்டங்கள் இயற்றுவது சட்ட சபைகளின் உரிமை—இவைகளின் கடமையுங்கூட! இதில் மனுவுக்கோ, அல்லது யாக்ஞவல்கியனுக்கோ இடமில்லை; '2,000 ஆண்டுகளுக்கு முன் மனு சொன்னதற்கும் செய்ததற்கும் அவரைக் கண்டிப்பதோ அல்லது ஒருவர், தனது கருத்துக்கு ஆதரவு தேட அவரை புகழ்வதோ கூடாது" என்றும் சட்ட மந்திரி பேசியிருக்கிறார்.

திருமதி ரேணு சக்ரவர்த்தி (கம்.) திருமதி சுசேதா கிருபளானி (ம. சோ.) போன்ற பெண்களும், இதரரும் மசோதாவை ஆதரித்தபோதும், இன்னும் கடுமையான சீர்திருத்தங்கள் வேண்டுமெனக் கோரினர்.

'ராம ராஜ்ய பரிஷத்'தைச் சேர்ந்த நந்தலால் சர்மா என்பவர், இந்துக்களின் சொந்த உரிமைகள் பற்றிய சட்டங்களை மாற்ற இம்மசோதா மூலம் முயற்சி செய்யப்படுகிறது என்றும், மொகலாய மன்னன் அவுரங்கசீப், மற்றும் பிரிட்டிஷார் கூட இம்மாதிரி செய்யவில்லை என்றும் குறைபட்டுக்கொண்டு, வழக்கம்போல மசோதாவை எதிர்த்திருக்கிறார்.

One side of the page is dark



# ஆங்கிலம் பற்றி பம்பாய் சர்க்காரின் கொள்கை

## 'முட்டாள்தனமானது' என பம்பாய் காங்கிரஸ் தலைவர் பட்டீல் வர்ணனை!

சூரத், மே 1—

"ஆங்கிலத்தைப் பொறுத்தவரையில் பம்பாய் சர்க்காரின் கொள்கை 'முட்டாள்தனமானது.'"

"ஆங்கிலத்தையோ, அல்லது வேறெந்த மொழியையோ அடக்கி ஒடுக்கி அழித்துவிடுவதினால் தேசிய மொழியை அபிவிருத்தி செய்துவிட முடியாது,"

—என்று, பம்பாய் பிரதேச காங்கிரஸ் தலைவர் எஸ். கே. பட்டீல் ஆங்கிலப் பள்ளி ஒன்றைத் திறந்து வைக்கையில் பேசியிருக்கிறார்.

மேலும் அவர் குறிப்பிட்டார்:—

"விரிவான அறிவு வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும், சர்வதேச நலனுக்குமாக ஆங்கிலக் கல்வி கிடைப்பதற்கு எவ்விதத் தடையுமிருக்கக் கூடாது.

"ஒவ்வொருவரும் தேசிய மொழியைப் பயிலுமாறு கட்டாயப்படுத்தப்பட வேண்டும்;

"தாய் மொழியிலேயே கூடுமானவரை கல்வி போதிக்கப்பட வேண்டும்; ஆனால், 'ஆங்கிலத்தை ஒழிப்பதுதான் இந்தி வளர்வதற்குரிய வழி,' என்று கல்வி அறிவற்றோர்தான் வாதிடுவர்."

"ஆங்கிலம் ஒரு அன்னியமொழி அல்ல; ஆங்கில பாணியில் நமக்குக் கிடைத்துள்ள நீதி, நிர்வாக முறையைப் போலவே, ஆங்கிலமும் நமக்குக் கிடைத்துள்ள சொத்தாகும்.

"இந்தச் சொத்துக்களைத் தந்ததுடன், ஜனநாயக முறை ஆட்சி பற்றிய எண்ணத்தை இந்த நாட்டு மக்களின் உள்ளத்தில் புகுத்திய ஆங்கிலேயருக்கு நாம் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம்."

## 'வாக்களித்த நன்கொடையை தரவும்!'

### 'தவறினால் 102 பள்ளிகள் மூடப்படும்'

### ஆந்திர சர்க்கார் எச்சரிக்கை

பொது மக்கள் பணஉதவி செய்வதாக வாக்களித்ததின் காரணமாக ஆந்திர சர்க்கார் பல புதிய பள்ளிக்கூடங்களைத் திறந்தனர்.

ஆனால், பணஉதவி செய்வதாக வாக்களித்த பெருமக்களில் பலர், தங்கள் உதவித் தொகைகளை அளிக்கவில்லையாம். பிரகாசம் மந்திரி சபை சென்ற அக்டோபர் திங்களில் இதுபற்றி எச்சரிக்கை செய்ததாம்.

இப்போது கோபால் ரெட்டியின் மந்திரி சபை, பொது மக்கள் உறுதியளித்த நன்கொடைப் பணத்தைத் தராவிட்டால் 102 உயர்நிலைப்பள்ளிகள் அடுத்து வருகிற பள்ளி ஆண்டில் திறக்கப்படமாட்டாது என்று எச்சரித்துள்ளதாம். நன்கொடை பணத்தில் மூன்றில் ஒரு பங்கை இவ்வாண்டு ஜூலை முதல் தேதிக்குள் தரலாம் என்றும், மீதத்தை 1956 ஏப்ரல் முதல் தேதிக்குள் தரலாம்என்றும் ஆந்திர மந்திரி சபை உத்தரவிடும் என்று முதலமைச்சர் கோபால் ரெட்டி அறிவித்தார்.

## பிரபல தொழிற் சங்கத் தலைவர் மரணம்

### மே தின விழாவில் பேசுகையில் நேரிட்ட சம்பவம்

லண்டன், மே. 1—

பிரிட்டனில் பிரபல தொழிற் சங்கத் தலைவரான ஆர்தர் டீகின், எல்ஸ்டர் எனுமிடத்தில் மே தின விழாவை யொட்டி நடைபெற்ற ஒரு கூட்டத்தில் பேசிக் கொண்டிருக்கையில் திடீரென மாரடைப்பினால் மரணமுற்றார். 64 வயது நிரம்பப் பெற்ற அவர், சுமார் 13 லட்சம் உறுப்பினர்களைக்கொண்ட போக்குவரத்து பொதுத் தொழிலாளர் சங்கத்தின் செயலாளராகப் பணியாற்றியவராவார்.

## 'பத்தாம் பசலி'க் கொள்கை!

### பண்டித நேருவும் உணருகிறார்!

"உலகம் பிரமிக்கத் தக்க அளவிற்கு முன்னேறிவிட்டது; ஆனால் மக்களின் மனம்தான் இன்னும் முழுமையாக முன்னேற்றப் பாதை நோக்கி மாறவில்லை. பெரும்பாலான மக்கள் இன்னும் பழைய பத்தாம் பசலிக் கொள்கையிலேயே இருந்துவருகிறார்கள் பலர், பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் இருந்துவந்த—ஆனால் தற்காலத்திற்குக் கொஞ்சம் கூட ஒத்துவராத பிரச்சினைகளைப் பற்றிப் பேசுகிறார்கள். மனுவிலிருந்தும், யாக்ஞவல்கியரிலிருந்தும் பற்பல சாஸ்திர ஆதாரங்களை ஏராளமாகக் காட்டி, சமுதாய சீர்திருத்தங்களை எதிர்த்துப் பேசுகின்றனர்."

"பன்னூறு ஆண்டுகளுக்கு முன்னர் யாக்ஞவல்கியரும், மனுவும், மாந்தாதாவும் சொன்ன யோசனைகளும், நீதியும், தற்காலத்திற்கு எவ்வாறுபொருந்தி வரும் என்பதைத்தான் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. கடந்த 2,000 ஆண்டுகளில் இந்தியா பெரும் மாற்றங்களுக்கு உள்ளாக்கப்பட்டிருக்கிறது. மனுவின் காலத்தில் இந்தியாவின் மக்கள் தொகை இரண்டரை கோடிதான்; ஆனால், இப்போதோ, 2½ கோடி அல்ல—37 கோடி! எனவே, தற்போதுள்ள 'மாறிவிட்டநிலை'மையில் முற்றிலும் 'கர்னாடக'மாகிவிட்ட பழக்க வழக்கங்களை எப்படி பற்றிக்கொண்டிருப்பது? எப்படி ஒரு குழந்தை, தான் போட்டுவந்த சொக்காய், தனது வளர்ச்சிக் காலத்தில் பிடிப்பானதாகத் தெரிந்ததும் அதைக் களைந்துவிட்டு வேறு புதிய சொக்காயைப் போட்டுக் கொள்கிறதோ, அதுபோலத்தான் சமுதாயம் வளர்ச்சியடைந்து வருங்காலை, அணிந்திருந்த 'பிடிப்பான' பழைய துணிகளைக் களைந்துவிட்டு, புதிய துணிகளை அணிந்து கொள்ளவேண்டும்."

இவ்வாறு இந்தியப் பிரதமர் நேரு பண்டிதர் புதுடில்லியில் நடைபெற்ற மேதின விழாப் பொதுக் கூட்டம் ஒன்றில் பேசுகையில் குறிப்பிட்டார்.

## ஆசைக்கும் அளவு வேண்டாமா?

புனா, மே. 1—

"நாட்டுப் பற்றை வளர்ப்பதற்கு, பலமான அடிப்படையின்கீழ் முயற்சிகள் செய்யவேண்டும்; இதற்காக, ஒரு பொது மொழி, பொது சாதி இரண்டும் வளரவேண்டும்; இன்று உள்நாட்டில் பற்பல விதமான வேற்றுமைகள் காணப்படுகின்றன; இவற்றையெல்லாம், இணக்கமாக ஒன்று சேர்க்கவேண்டும் என்ற ஆர்வம் ஏற்படவேண்டும்" என்று பம்பாய் கவர்னர் அரி கிருஷ்ண மெஹ்தாப் கூறியுள்ளார்.

# கழகச் செய்திகள்

## வால்பாறை வட்ட தி. மு. கழகம்

24—4—55 பகல் 1 மணிக்கு, தோழர் இ. ஐயாப்பிள்ளை தலைமையில் அவரது இல்லத்தில் நடைபெற்ற செயற்குழுக் கூட்டத்தில், தோழர் திராவிடமணியை மீண்டும் கழக உறுப்பினராகச் சேர்த்துக்கொள்வதெனவும், வால்பாறை வட்டாரத்திலுள்ள தி. மு. கிளைக் கழகங்கள் ஒன்றுகூடி, வால்பாறையில் வட்டாரக் கழகத் தலைமை நிலையம் ஒன்று ஏற்படுத்துவது என்றும் தீர்மானிக்கப்பட்டதுடன், மற்றும் சில முடிவுகளும் செய்யப்பட்டன.

## சந்தைப் புதுப்பாளையம் தி. மு. கழகம்

27—4—55-ல், கழக இல்லத்தில், தோழர் கா. மா. மாரிமுத்து தலைமையில் நடைபெற்ற கழகச் செயற் குழுக் கூட்டத்தில், 24—3—55-ல் நடைபெற்ற ஐந்தாண்டுத் திட்டக் கண்டனப் பொதுக் கூட்ட வரவு-செலவு கணக்குகள் சரிபார்க்கப்பட்டு ஒப்புக்கொள்ளப்பட்டதுடன், இவ்வூரில், வருகிற 10-ந் தேதியன்று மே தின விழா கொண்டாடுவதெனவும் தீர்மானிக்கப்பட்டது.

## குளித்தலை தி. மு. கழகம்

27—4—55 இரவு 9-30 மணிக்கு, மஜீத் பாண்டியன் மன்றத்தில், தோழர் தி. வீ. முத்துகிருஷ்ணன் தலைமையில் நடைபெற்ற கழகச் செயற்குழுக் கூட்டத்தில், தி. மு. கழகப் புதிய பொதுச் செயலாளராக இரா. நெடுஞ்செழியன் தேர்ந்தெடுக்கப்பட்டதற்கும், பொதுக் குழு உறுப்பினர்களையும், மற்றும் திருச்சி மாவட்டச் செயலாளரையும், மாவட்டப் பிரதிநிதிகளையும் பாராட்டித் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பின்னர், கடந்த ஆறு ஆண்டு காலமாகப் பொதுச் செயலாளராக இருந்து பெரும் பணியாற்றிய அறிஞர் அண்ணாதுரை அவர்களுக்குப் பாராட்டுதலும், நன்றியும் தெரிவித்துக் கொண்ட பின்னர், இவ்வூரில் மே விழா கொண்டாடுவதெனவும், இவ்வூரிலுள்ள துவக்கப் பள்ளியில் அரை நேரப் படிப்பை முழு நேரப் படிப்பாக உடனடியாக மாற்றி அமைக்க ஆவன செய்யுமாறு மாவட்ட மன்றத் தலைவரைக் கேட்டுக்கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## சென்னை 35-வது வட்ட தி. மு. கழகம்

27—4—55 இரவு 8½ மணியளவில் நடைபெற்ற கழகச் செயற்குழுக் கூட்டத்தில், முன்னர் செயற்குழுவில் மேற்கொள்ளப்பட்ட தீர்மான முடிவுகளை நடைமுறைக்குக் கொண்டுவருவது என்று வலியுறுத்தப்பட்டதுடன், 14—5—55ல் கழக ஆண்டு விழா நடத்துவதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

## டச்சு மக்கள் சபை

### பாரிஸ் ஒப்பந்தங்களுக்கு அங்கீகாரம்

ஹேக், மே 2—

மேற்கு ஜெர்மனிக்கு மீண்டும் படை பலம் தரும் பாரிஸ் ஒப்பந்தங்களை டச்சு மக்கள் சபை அங்கீகரித்திருக்கிறது.

அந்த ஒப்பந்தங்களை உறுதி செய்யும் கடைசி நாடு இதுதான். இத்துடன் ஒப்பந்தங்களை உறுதி செய்யும் வேலை முடிகிறதாம்.

---

1954-ல், இந்தியா, 5798 லட்சம் கெஜம் கைத்தறித் துணியை ஏற்றுமதி செய்தது.

## தாத்தையங்கார் பேட்டை தி. மு. கழகம்

30—4—55 மாலை 5 மணிக்கு, இவ்வூர் கழகச் செயற் குழுக் கூட்டம், தோழர் எம். எஸ். என். இராசன் தலைமையில் நடைபெற்றபோது, கழகச் சார்பில் மே திங்கள் இறுதிக்குள் ஓர் பொதுக் கூட்டம் நடத்துவதெனவும், மே தின விழாவை தண்டுத் தாள் மூலம் பொது மக்களுக்கு அறிவிப்பதெனவும் தீர்மானிக்கப்பட்டது.

## சென்னை 9-வது வட்ட தி. மு. கழகம்

30—4—55 இரவு 9 மணிக்கு கழக இல்லத்தில், தோழர் புதுவை மணி தலைமையில் நடைபெற்ற கழக நிர்வாக உறுப்பினர்கள் கூட்டத்தில், கழக எதிர்கால ஆக்க வேலைகள் குறித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## பள்ளிகொண்டாவில் கழகக் கொடியேற்று விழா

1—5—55 காலை 10 மணிக்கு, தோழர் பி. சி. விசுவநாதன் முன்னிலையில், தோழர் சி. சீனிவாசன், கழக இல்லத்தில், கழகக் கொடியேற்றி வைத்தார். சிறுருக்கு மிட்டாயும், சிற்றுண்டியும் வழங்கப்பட்டது.

## குடந்தை நகர தி. மு. க.

1—5—55 காலை 10½ மணியளவில் தோழர் கே. கே. நீலமேகம் இல்லத்தில், தோழர் சு. பத்மனாபன் தலைமையில் நடைபெற்ற குடந்தை நகர தி. மு. கழகச் செயற்குழுக் கூட்டத்தில், 8—5—55ல் மே தின விழாக் கொண்டாடுவதென்றும், விரைவில் நகர தி. மு. கழகப் பணிமனை அமைப்பது என்றும் முடிவு செய்யப்பட்ட பின்னர், சென்ற திங்கள் 9-ந் தேதி நடைபெற்ற பொதுக் கூட்ட வரவு-செலவு கணக்குகள் சரிபார்க்கப்பட்டு ஒப்புக்கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## சேலம்-செவ்வாய்பேட்டை தி. மு. கழக கிளை ஆண்டு விழா

1—5—55 காலை 9 மணியளவில், இவ்வூரின் பல பகுதிகளில் தோழர் கண்ணதாசன் கழகக் கொடியேற்றுதலுடன்விழாஆரம்பமாயிற்று.

கொமாரசாமி செட்டித் தெருவில் அமைக்கப்பெற்றிருந்த பந்தலில், தோழர் பி. பி. பத்மனாபன் தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தோழர்கள் கண்ணதாசன் ஜி. பி. சோமசுந்தரம், முகவை ஆர். எஸ். பாண்டியன், ஈ. ஆர். கிருஷ்ணன், கே. ஏ. மதியழகன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். தோழர்களனைவருக்கும் கைத்தறித் துண்டுகள் அணிவிக்கப்பெற்றன. ஏராளமான பொதுமக்கள் விழாவில் கூடியிருந்தனர்.

## திண்டிவனம் தி. மு. க.

1—5—55 மாலை 6½ மணிக்கு இவ்வூர் கழக இல்லத்தில், கழகச் செயலாளர் தலைமையில் நடைபெற்ற கழகச் செயற்குழுக் கூட்டத்தில், தி. மு. கழகப் பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்களுக்கு நன்றி தெரிவித்தும், முன்னாள் பொதுச் செயலாளர் அண்ணாதுரை அவர்களுக்கு நன்றி தெரிவித்தும், ஜூன் திங்களில் இவ்வூரில் கழகச் சார்பில் ஒரு பொதுக் கூட்டம் நடத்துவதெனவும் தீர்மானிக்கப்பட்டது.

## மதுரையில் வ. உ. சி. சிலை

"மதுரையில் முக்கியமான இடத்தில், வ. உ. சிதம்பரம் பிள்ளையின் உருவச் சிலையை நிறுவ வேண்டும்;"

என்ற, ஒரு தீர்மானம், 24-4-55ல் வழக்கறிஞர் எம். எம். ராமலிங்கராஜு தலைமையில், தலையாரி இருநாதன் கோயிலில் கூடிய ஒரு கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டது.

மேற்படி வேலையைக் கவனிக்க தோழர்கள் எஸ். வி. வாதேவநாயர், என். செல்லையா ஆகியோர் கன்வீனர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தோழர் ஆர். குருநாத பிள்ளை இறுதியில் அனைவருக்கும் நன்றி கூறினார்.

## 'பெரிய மனிதர்'களின் போக்கு!

### அறந்தாங்கி கழகத் தோழர்கள்மீது 'தாக்குதல்'

அறந்தாங்கி வட்டத்தில் உள்ள ஆவணத்தான் கோட்டை எனும் ஊரில், தி. மு. கழகத்தைச் சேர்ந்த தோழர்களுக்குத் தேநீர்க் கடைகளில் தேநீரும், மற்றும் சிற்றுண்டிகளும் தர மறுக்கப்படுகின்றனவாம். அங்குள்ள 'பெரிய மனிதர்'கள் சிலர் இவ்விதக் கட்டுப்பாடுகளை விதித்துள்ளனராம்.

இத்துடன் இவ்வூரிலுள்ள கழகத்தையே கலைத்துவிட வேண்டுமென்ற நோக்குடன் கழகத் தோழர்களைக் கண்ட இடங்களில் வழி மறித்து அவர்களைத் துன்புறுத்தி வருகின்றனராம். அவர்களை வற்புறுத்தி பலாத்காரமாகக் கதர்த் துணி அணிவிப்பது, சாம்பல் பூசுவது போன்ற பலாத்காரச் செயல்களிலும் ஈடுபட்டுள்ளனராம்.

இது சம்மந்தமாக அறந்தாங்கி போலீசில் புகார் செய்து இரண்டு வாரங்களுக்குமேல் ஆகியும் இது வரையிலும் எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளப்படவில்லை என்று தெரிய வருகிறது.

மாறாக, கழகத் தோழர்கள்மீது ஏவப்பட்டிருக்கும் விரும்பத்தகாத செயல்கள் வளர்ந்துகொண்டே வருகின்றனவாம். (ந. தி.)

## கழக இல்லத்தின் பெயர்ப் பலகை களவாடப்பட்டது!

பெங்களூர் நகரம், அக்கிப் பேட்டை கிளை தி. மு. கழக இல்லத்தின் முன்னர் மாட்டி வைக்கப்பட்டிருந்த பெயர்ப் பலகையை யாரோ குண்டர்கள் சிலர் சென்ற திங்கள் 28-ந் தேதியன்று இரவு களவாடிச் சென்றிருக்கின்றனர். மேற்படி செய்தி போலீசுக்கும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. மேற்படி காலிகளைக் கண்டு பிடிப்பதில் கழகத் தோழர்கள் தீவிரமாக முனைந்துள்ளனர். (ந. தி.)

## பெயர் சூட்டல்

சென்னை திருவல்லிக்கேணி கடற்கரையில் 1—5—55 அன்று மாலை நடைபெற்ற மேதின விழாப் பொதுக் கூட்டத்தின்போது, சென்னை 7-வது வட்டம் மூலக்கொத்தளம் கொல்லாமதி நகர் தோழர் ஏ. வேணுகோபால் அவர்களது ஆண் மகவுக்கு தி. மு. கழகப் பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் 'செம்பியன்' என்று பெயரிட்டார். அதன் நினைவாக 'நம் நாடு' இதழ் வளர்ச்சிக்கு ரூ. 1 நன்கொடை தரப்பட்டது — பெற்றுக்கொண்டோம்—நன்றி — பொறுப்பாளர்.

## அன்பளிப்பு

தி. மு. கழகத் தலைமை நிலையத்திலிருந்து அனுப்பிவைக்கப்பட்ட 'ஐந்தாண்டுத் திட்டக் கண்டன'ச் சுவரொட்டியைப் பெற்றுக் கொண்டு, நன்றி தெரிவிக்கும் வகையில் குளித்தலை தி. மு. கழகச் செயலாளர் தோழர் தி. வீ. முத்துகிருஷ்ணன் ரூ. 1 அன்பளித்தார்—வரப்பெற்றோம்—நன்றி—பொறுப்பாளர்.

# 5,000 மாணவர்கள் வேலை நிறுத்தம்

கோடை விடுமுறையை மாற்றியமைக்கக் கோரிக்கை

## மைசூர் பள்ளிகள் மூடப்பட்டன

மைசூர், மே 3—

கோடை விடுமுறை நாட்களின் தேதிகளை மாற்ற வேண்டுமென்று கோரி இங்குள்ள பள்ளி மாணவர்களில் 5,000 பேர் பள்ளி செல்லாமல் வேலை நிறுத்தம் செய்தனர் என்று தெரிய வருகிறது.

பெங்களூர் நகரசபை பகுதியில் இருப்பதுபோல் மே மாதம் 10-ந் தேதியிலிருந்து ஜூன் மாதம் வரையில் விடுமுறை வேண்டுமென்று கோரி இந்த மாணவர்கள் ஊர்வலமாகச் சென்று பல பள்ளிகள் முன் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

பெரும்பாலான பள்ளிகள் இன்று பிற்பகலில் மூடப்பட்டிருந்தன.

பெங்களூர் நகரசபை பகுதியில் மட்டும் கோடை விடுமுறை, மே மாதத்தில் இருபது நாட்கள் விடப்படும் என்று அண்மையில் சர்க்கார் ஒரு உத்திரவு பிறப்பித்திருந்தனர்.

மைசூரிலும் அம்மாதிரி கோடை விடுமுறை நாட்கள் மாற்றப்பட வேண்டும் என்று கோரப்படுகிறது.

## கம்யூனிஸ்டு நாடுகளின் மாநாடு

வார்சாவில் நடைபெறுமாம்

சீன பார்வையாளராக இருக்கும் ரஷ்யா, மற்றும் கிழக்கு ஐரோப்பிய நாடுகளின் பிரதிநிதிகள் போலந்து தலைநகரான வார்சாவில் மே மாதம் 11-ந் தேதி கூடி பேசுவார்கள் என்றும், மேற்கு ஜெர்மனி மீண்டும் படை பலம் பெறச் செய்யும் பாரிஸ் ஒப்பந்தங்கள் அங்கீகரிக்கப்பட்டிருப்பதற்கு எதிர் நடவடிக்கைகள் மேற்கொள்வது பற்றி அவர்கள் விவாதிப்பார்கள் என்றும் கூறப்படுகிறது.

கூட்டு இராணுவத் திட்டம் ஒன்றை அமைக்க இந்த நாடுகள் ஏற்கனவே திட்டமிட்டுள்ளன.

வார்சா மாநாட்டிற்கு செஞ்சீனம் ஒரு பார்வையாளரை அனுப்புமாம்.

## இலாகாக்களுக்கு விரிவான அதிகாரம்

இந்தியப் பேரரசின் பல்வேறு இலாகாக்களுக்கும் தற்போதிருக்கும் நிதி, மற்ற அதிகாரங்களை அதிகப்படுத்தி உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டிருக்கின்றன.

நிதி இலாகாவிற்கும் இதர இலாகாக்களுக்கும் ஏற்பட்டிருக்கும் ஒப்பந்தங்களை அமுல் செய்வதின் பொருட்டே அந்த உத்தரவுகள் பிறப்பிக்கப்படுகின்றனவாம்.

ஒப்பந்தப்படி, நிதி இலாகா பல பிரச்சினைகளில், இதர இலாகாக்களுக்கு விரிவான அதிகாரங்களை வழங்க சம்மதித்துள்ளதாம்.

அதிகமான அதிகாரங்கள் வழங்குவது, வேலைகள் சுலபமாகவும் சீக்கிரமாகவும் நடைபெறவும், அனாவசியமாக நிதி இலாகாவைக் கலந்தாலோசிப்பது குறையவும் பெரிதும் உதவும் என்றும் சென்ற ஆண்டில் நிறுவப்பட்ட நிர்வாக அமைப்பு முறைகள் பற்றிய பிரிவு தாக்கல் செய்துள்ள முதல் ஆண்டு அறிக்கை கூறுகிறது.

இந்த அறிக்கையை பிரதமர் நேரு மக்கள் சபையில் தாக்கல் செய்துள்ளார்.

## விஞ்ஞானிகள் எதிர்க்கின்றனர்!

புதுடில்லி, மே 3—

யுத்தங்களில் அணுகுண்டுகளை உபயோகிப்பதை உலகெங்கணுமுள்ள விஞ்ஞானிகள் எதிர்ப்பதாக பௌதிக நிபுணரும், மேற்கு ஆஸ்திரிய பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணைவேந்தருமான பேராசிரியர் ஏ. டி. ராஸ் இங்கு கூறியிருக்கிறார்.

## அணுசக்தி மருந்துகள் ஆராய்ச்சிக் கழகம்

கல்கத்தாவில் நிறுவப்படும்

அணு மூலப் பொருட்களைக் கொண்ட மருந்துகள் தயாரித்து நோய்களைக் குணப்படுத்துவதற்கான ஆராய்ச்சிகள் கல்கத்தாவில் மேற்கொள்ளப்படும்.

இங்கு நிறுவ உத்தேசிக்கப்பட்டுள்ள பௌதிகக் கழகத்தில் இந்த ஆராய்ச்சி நடைபெறுமாம்.

## பெண்களைத் தாக்கும் அக்கிரமம்!

கோவா போலீசாரின் வெறி!

கோவா விடுதலை இயக்கத்தை முறியடித்துவிட முயற்சிக்கும் கோவா அதிகாரிகள் மிருகத்தனத்தின் எல்லையை நெருங்கிக்கொண்டிருக்கின்றனராம்.

தங்களது அடக்குமுறைக் கொடுமை கண்டு விடுதலை இயக்கம் நசிந்துவிடும் என்றெண்ணுகின்றனராம்.

அண்மையில் கைது செய்யப்பட்ட லூஷாபட்சே, லீலாவத் ஆகிய இரு வீராங்கனைகளையும், வழிநெடுக, முகத்திலும் உடம்பிலும் தாக்கிக்கொண்டே போலீஸ் நிலையத்திற்கு அழைத்துச் சென்றனர் என்று தெரிகிறது; உறவினர்களைக்கூட அவர்கள் காண்பதற்கு அனுமதிக்கப்படவில்லையாம்

## பிரெஞ்சு வாலிபரின் வெறிச் செயல்!

பிரெஞ்சுக்காரர்களும், நீக்ரோக்களும் ஒத்து வாழ வேண்டுமென்ற கருத்தைக் கொண்ட அகில உலக புகழ் படைத்த 85 வயது நிரம்பிய பிரெஞ்சு விஞ்ஞானி டாக்டர் பெர்னெட் என்பாரை மூன்று பிரெஞ்சு இளைஞர்கள் இரும்புத் தடியால் அடித்து மூர்ச்சை அடையும்படி செய்தார்கள் என்று தெரிகிறது.

பல உலக விஞ்ஞான மாநாடுகளில் பிரான்சின் பிரதிநிதியாகக் கலந்துகொண்ட அந்த வயது முதிர்ந்த விஞ்ஞானி, ரத்தம் ஒழுக ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டார். அவருடைய நிலை மிகவும் பரிதாபகரமாயிருப்பதாகக் கூறப்படுகிறது.

## தீண்டாமை ஒழிப்பு மசோதா

பாராளுமன்ற மேல் சபையில் நிறைவேற்றம்

தீண்டாமையைக் கடைபிடிப்பதற்குத் தண்டனை விதிக்கும் மசோதா பாராளுமன்ற மேல் சபையில் பலத்த ஆரவாரத்திற்கிடையே நிறைவேறியுள்ளது.

## இம்பீரியல் பாங்கி

அரசாங்க வசமாகிறது

புதுடில்லி, மே. 3—

மக்கள் சபை நிறைவேற்றியுள்ள இம்பீரியல் பாங்கியை தேசிய உடைமையாக்குவதற்கும் புதிய அரசாங்க பாங்கி ஏற்படுத்தவும் வழி செய்யும் அரசாங்க பாங்கி மசோதா இந்தியப் பாராளுமன்ற மேல் சபையில் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது

இந்த மசோதாவின் கீழ் ஜூலை 1-ந் தேதிக்குள் இம்பீரியல் பாங்கி, அரசாங்க பாங்கியாக மாறிவிடக் கூடும் என்று ரெவின்யூ மந்திரி ஏ. சி. குஹா தெரிவித்திருக்கிறார்.

## கோவை மாவட்டக் குழு சுற்றறிக்கை

★

"ஜூன் திங்களில் திருச்சியில் நடைபெற இருக்கும் தி. மு. கழக மாநில மாநாட்டு ஆரம்பச் செலவுகளுக்கு ரூ. 25,000 வேண்டுமென பொதுக்குழு கேட்டிருக்கிறது.

"நமது மாவட்டத்தின் சார்பாக ரூ. 2,000 வாக்களிக்கப் பட்டிருக்கிறது; மே மாதம் இறுதிக்குள், ரூ. 2000-த்தை நமது மாவட்டத்தில் திரட்டி ஜூன் முதல் வாரத்தில் பொதுக் குழுவிடம் ஒப்படைத்தாக வேண்டும். இந்த முயற்சியில் தங்களூர் கழகத்தின் ஒத்துழைப்பைப் பெரிதும் நாடுகிறேன்.

"தங்களது கழகத்தின் சார்பாகக் குறைந்து (பேரூர்க் கிளை 100 ரூபாயும் சிற்றூர்க் கிளை 30 ரூபாயும்) மே 20-ந் தேதிக்குள் வசூலித்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பித்தர வேண்டுகிறேன்.

"மே 22-ந் தேதி நமது மாவட்டக் குழு பொள்ளாச்சியில் கூட இருக்கிறது என்பதையும் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

"நிதி திரட்டுவது சம்பந்தமாக தங்கள் முயற்சிகளைக் குறித்து உடனுக்குடன் எனக்கு தெரிவிக்க வேண்டுகிறேன்.

"தங்களூர் கழக சார்பில் நடைபெறும் நிகழ்ச்சிகளைக் குறித்து அவ்வப்போது உடனுக்குடன் எனக்கு அறிவிக்க வேண்டுகிறேன்,"

என்று கோவை மாவட்ட தி. மு. கழகச் செயலாளர் ஈ. வெ. கி. சம்பத் அறிவிக்கிறார்.

பணம் அனுப்பும் முகவரி:—

ஈ. வெ. கி. சம்பத்,
43, கரூர் ரோடு, ஈரோடு

## மதுரை மாவட்ட தி. மு. கழக செயற்குழு உறுப்பினர்கட்கு

"8—5—55 காலை 10 மணிக்கு திருப்பரங்குன்றம் பஸ் நிலையத்திற்கு அருகில் உள்ள மடத்தில் நடைபெறும். மாநில மாநாடு நிதி, பொதுச்செயலாளர் வரவேற்பு ஆகிய பொருட்கள் ஆராயப்படும்,"

என்று மதுரை மாவட்ட தி. மு. கழகச் செயலாளர் தோழர் எஸ் முத்து அறிவிக்கிறார்.

குறிப்பு: வெளியூர் பிரதிநிதிகளை பஸ் நிலையத்தில் தொண்டர்கள் வரவேற்பார்கள்.

## தூத்துக்குடி தோழர்களுக்கு

"8—5—55 ஞாயிறு மாலை 5 மணிக்கு, வடக்கூர் தி. மு. கழக பார் கிளைப்பில் உறுப்பினர்கள் கூட்டம் நடைபெறும். உறுப்பினர்கள் தவறாது வந்து அண்ணா வருகை, பொதுச் செயலாளருக்கு வரவேற்பு, கணக்கு பரிசீலித்தல் ஆகிய பிரச்சினைகளை முடிவு செய்யும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்,"

என்று, தோழர் எம். எஸ். சிவசாமி அவர்கள் அறிவிக்கிறார்.

நாஞ்சில் கி. மனோகரன்
வி. சண்முகநாதன்
கோவை-செழியன்

சுற்றுப்பிரயாணம்

மே 5 அரிக்காரன்வலசு
6 தாராபுரம்
7 கன்னபுரம்
8 மேட்டுபாளையம்
10 உடுமலைப்பேட்டை

# உ. பி. சிறை அதிகாரிகள் திணறல்!

## போலி விடுதலை உத்திரவினால் 12 கைதிகள் தப்பி ஓடினர்

லக்னோ, மே. 3—

நீதிமன்றங்களின் சீல்கள், அதிகாரிகளின் கையெழுத்துக்கள் ஆகியவைகளைத் தயார் செய்வதன் மூலம் கான்பூர், ஒட்டவா, அசிபுரி, அர்தோய், பிளபிசிட், அலிகார், ஆக்ரா முதலிய மாவட்டங்களைச் சேர்ந்த கைதிகள் 12 பேர் பதேகார் மத்திய சிறையிலிருந்து தப்பித்துக் கொண்டு சென்றுவிட்டனராம்.

சென்ற மாதம் 11-ந் தேதி முதல் 17-ந் தேதிக்குள் இச்சம்பவம் நடைபெற்றுள்ளதாம்.

பதிவுத் தபால்கள் மூலம், இந்த உத்தரவுகள், சம்மந்தப்பட்ட மாவட்ட சிறை அதிகாரிகளிடமிருந்து பதேகார் மத்திய சிறை அதிகாரிக்கு அனுப்பப்படும் முறையில் இருந்தது.

இந்த ஏமாற்றுவித்தையை சிறை அதிகாரிகள் இப்போதுதான் கண்டுபிடித்தார்களாம்.

தப்பித்துச் சென்ற கைதிகள் அனைவரும் ஒரு ஆண்டு முதல் ஆயுள் காலம் வரை தண்டனை பெற்றவர்களாம்.

உத்திரப் பிரதேசத்தில் பிரசித்தி பெற்ற கொள்ளைக்காரனை மான்சிங் என்பவனின் முயற்சியால்தான் இக்கைதிகள் தப்பித்துச் சென்றனர் என்று கருதப்படுகிறது ஏராளமான பொருளாதார வசதிகளுடன் ஒரு கூட்டத்தினர் இக்காரியத்தைச் செய்வதாகக் கருதப்படுகிறதாம்.

## மே தின விழாக் கூட்டங்கள்

★

ஈரோடு
காரைவாய்க்கால் திடலில்
7—5—55 மாலை 7 மணிக்கு
தலைவர்: கே. வீரகேசரி
பேசுவோர்:
திருச்சி டி. கே. சீனிவாசன்
எஸ். அப்பாவு
ஈ. ஏ. மதார்சா
முத்துக்கண்ணு-தேவராசன்

குறிப்பு: மாலை 4 மணிக்கு பஸ் ஸ்டாண்டிலிருந்து தோழர் ஆர் தேவராசன் தலைமையில் சைக்கிள் ஊர்வலம் நடைபெறும்.

★

வாணியம்பாடி
வாரச்சந்தை அருகில்
7—5—55 மாலை 6 மணிக்கு
தலைவர்: முல்லைச்சத்தி
பேசுவோர்:
ஈ. வெ. கி. சம்பத்
எம். பி. வடிவேல்
எம். நடேசன்

★

இராசபாளையம்
டாக்டர் அம்பேத்கார் திடலில் (அம்மன் பொட்டல்)
8—5—55 மாலை
பேசுவோர்:
தில்லை-வில்லாளன்
ப. க. பாண்டியன்
(அன்று மாலை 2 மணிக்கு மே தின விழா ஊர்வலமும் நடைபெறும்)

★

வேலூர் (வ. ஆ. மாவட்டம்)
8—5—55 மாலை 6 மணிக்கு
பேசுவோர்:
சி. பி. சிற்றரசு
ப. உ. சண்முகம்

★

குடந்தை
வெள்ளி விழா பூங்காவில்
8—5—55 ஞாயிறு மாலை
தலைவர்: சு. பத்மநாபன்
பேசுவோர்:
குடந்தை எஸ். ஆர். ராதா
பூங்கோதை
அருண்மொழி

## நீலகிரி பகுதி

தி. மு. கழகத் தோழர்களுக்கு

"நீலகிரியிலுள்ள தி. மு. கழகக் கிளைகளின் செயலாளர்களும், மாவட்டப் பிரதிநிதிகளும் 15—5—55 மாலை 3-மணிக்கு குன்னூர் தி. மு. கழக அலுவலகத்தில் கூடி, சில முக்கியமான பிரச்சினைக்கு முடிவெடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதால், செயலாளர்களும், மாவட்டப் பிரதிநிதிகளும் இதையே அழைப்பாகக்கொண்டு வருகைதர வேண்டுகிறேன்,"

என்று கோவை மாவட்டத் துணைச் செயலாளர் வி. சண்முகநாதன் அறிவிக்கிறார்.

## நாடற்ற இந்தியர்

இந்தியா பாதுகாக்க—வேண்டியதில்லையாம்!

புதுடில்லி, மே 2—

"இலங்கை சர்க்காரின் நடவடிக்கைகளினால் நாடற்றவர்களாக்கப்படும் மக்களைக் காப்பாற்றும் பொறுப்பு இந்திய சர்க்காருக்கு கிடையாது,"

என்று இந்திய பாராளுமன்றத்தில் பண்டித நேரு கூறினார்.

"இலங்கையிலிருந்து வெளியேற்றப்படும் நாடற்ற மக்களின் நல்வாழ்வுக்காக இந்திய சர்க்கார் என்ன திட்டங்களை தீட்டியிருக்கிறது?" என்று, ஜோகிம் ஆல்வா கேட்ட கேள்வி ஒன்றுக்குப் பதில் அளிக்கையில்தான், பண்டித நேரு மேற்கண்டவாறு குறிப்பிட்டார்.

## கொள் முதல் வரி ரத்தாகிறது!

லண்டன், மே 3—

கம்பள ஜவுளி அல்லாத இதர எல்லா ஜவுளிகள் மீதும், குடும்ப உபயோகத்திற்கான ஜவுளிகள் மீதும் கொள்முதல் வரியை பிரிட்டன் ரத்து செய்து விட்டதாக பிரதமர் ஈடன் மக்கள் சபையில் தகவல் தந்துள்ளார்.

வெளிநாடுகளின் போட்டியை சமாளிப்பதில், லங்காஷயர் ஜவுளி வர்த்தகத்திற்கு உதவி செய்வது தான் இந்த வரி ரத்து செய்யப்படுவதின் நோக்கம் என்று தெரிகிறது.

## இந்தியாவுக்கு...

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

என்பதாகும்.

"இந்த மொழிகளிலெல்லாம், ஏதோ ஒரு சக்தி மிகுந்த — மக்களின் உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கும் 'தன்மை' இருக்கிறது; அந்தத் 'தன்மை'யை எந்தச் சட்டத்தாலும் அழித்துவிட முடியாது. எந்த நேரத்தில் சட்டத்தின் மூலம் கட்டாயப்படுத்தும் நிலை ஏற்படுகிறதோ, அதே நேரத்தில் எதிர்ப்பும் கிளம்பும்.

"ஏதாவது ஒரு பொதுமொழி உருவாக வேண்டுமென்றால், அது தானாகவே உருவாக வேண்டும்; கட்டாயத்தின் மூலமாகவோ, அல்லது சட்டத்தின் மூலமோ அதை உருவாக்க முடியாது."

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன், எம். ஏ.

